# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – சித்திரை

2021 – ஏப்ரல்

ANNAPOORNI DINING HALL

ரிஷிகேஷ் கோவிலூர் மடாலயத்தில் சாதுக்களுக்கு அன்னதானம் வழங்குதல்

~~99~~ 106

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – சித்திரை

2021 – ஏப்ரல் இதழ் – 106



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்

1. ஆசியுரை 2
2. கம்பராமாயணம் 4
3. ஓம் நமோ நாராயணாய 6
4. பரந்தாமன் பாமாலை 12
5. திருக்குறள் தெளிவுரை 18
6. திருவிளையாடற்புராணம் 21

தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

*சுப்பிரமணியக் கடவுள்*

யோகநிலை யினர்மூலா தாரமுதல் புண்டரிகம்
ஒருஆறும் ஞான
பாகநிலை யினர்காமம் ஆதிஇருள் ஓராறும்
பரவிப் பூப்பப்
போகநிலை நில்லாது புரியும் இளம் கதிரின்முகம்
பொலிய மேனி
ஏகநிலை அருள்புரிய ஒளிர்குமரக் கடவுள்அடி
இறைஞ்சி வாழ்வாம்.

– *கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

சமீப காலமாக, கொரோனா வைரஸ் பரவல் இரண்டாம் அலையாக மிக வேகமாகப் பரவி வருகிறது. சென்ற பரவல் அலையை விட இப்பொழுது வேகம் அதிகமாகவும், உயிர்ச் சேதம் அதிகம் ஏற்படுத்தக் கூடியதாகும். அதுவும் நடுத்தர வயதுடையவர்களை அதிகம் பாதிப்பதாக உள்ளது என்று பலதரப்பட்ட இடங்களிலிருந்து அறிவுறுத்தலும் அச்சுறுத்தலும் அதிகமாகிக் கொண்டு வருகின்றன. இந்தச் சூழ்நிலையில் நாமும் நம் தரப்பில் இருந்து சில அறிவுறுத்தல்களை அளிக்க விரும்புகிறோம். அச்சுறுத்த வேண்டிய அவசியம் இல்லையென்பதால் அதனை அளிக்கவில்லை. அச்சம் தேவையில்லை அலட்சியமும் காட்ட வேண்டாம்.

உன்னிப்பாகச் சிந்தித்துப் பார்த்தால் இந்தக் கொரோனா நுண்கிருமி (Virus) பரவல் முற்காலங்களில் பரவித் துயர்கொடுத்த, உயிர் இழப்புகளை ஏற்படுத்திய மற்றைய கிருமிகள், நுண்கிருமிகள் தொற்று நோய்கள் போன்றதே இந்தக் கொரோனாவும் என்று புரிந்து கொள்ளலாம். முற்காலத்தில் ஏற்பட்ட அம்மை, மலேரியா, காசநோய் போன்றதுவே இந்தக் கொரோனாவும். இந்தக் கொரோனா வைரஸ் கடந்த 15 மாதங்களாகப் பரவி உலக வாழ்க்கையில் ஓர் அங்கமாகத் தன்னை அமைத்துக் கொண்டுவிட்டது. எனவே விஞ்ஞாணிகளின் கருத்துப்படியும் ஆய்வாளர்களின் ஆய்வின்படியும் கொரோனாவை முற்றிலுமாக ஒழிப்பது உடனடிச் சாத்தியமில்லை. எப்படி காலப்போக்கில் மலேரியாவும், அம்மை நோயும் கட்டுப்படுத்தப்பட்டு, பின்னர் ஒழிக்கப்பட்டனவோ அதைப் போலத் தான் கொரோனாவையும் நம்மால் ஒழிக்க முடியும்.

இந்த நுண்கிருமி பரவல் தடுப்பைப் பற்றி ஆய்வு செய்கின்ற மேரிலேன் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சிச் தலைவர் (Head of Infectious Diseases Clinic, Univerysity of Maryland, USA) அவர்கள்

சொல்வது போல, கொரோனா நம் வாழ்வில் ஒரு அங்கமாக உருவெடுத்துள்ளது.

கொரோனா பாதிப்பிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்குச் சுயபாதுகாப்பு முறையே மிகச்சிறந்தது. நம்மை நாம் பாதுகாத்துக் கொள்வோம். கொரோனாவைப் பற்றி அதிகமான அச்சம் பதற்றம் தேவையில்லாதவை. யாரும் அஞ்சத் தேவையில்லை, அதற்காக அலட்சியமாக இருப்பதும் நல்லது இல்லை. ஒரு மனிதனுக்கு இறை நம்பிக்கையும், தன்னம்பிக்கையும் வாழ்வின் மிகமிக அத்தியாவசியமானவை; இன்றியமையாதவை. நம்முடைய சுய கட்டுப்பாட்டிலும் ஒழுங்குமுறை நடவடிக்கைகளிலும் நம்பிக்கை கொண்டு அச்சமின்றி, தயக்கமின்றி நம்முடைய காரியங்களைத் தொடர்ந்து செய்வோம். தன்னம்பிக்கை இழக்காமல் தளர்வு அடையாமல் நம் செயல்களில் நிதானத்தையும் உறுதியையும் காட்டுவோமாக. நம்முடைய உற்றார், சுற்றத்தார் அனைவருக்கும் மனத்தெம்பையும் நம்பிக்கையையும் ஏற்படுத்த முயல்வோமாக. வதந்திகளை நம்பி மிகைப்படுத்தப்பட்ட ஊடகச் செய்திகளை நம்பிப் பதற வேண்டாம், அச்சம் கொள்ள வேண்டாம். உலகில் உள்ள வியாதிகளில் மிக மோசமானவை தன் இரக்கம் கொள்வதும் அச்சப்படுவதுமே ஆகும். இருதய நோய்க்குக் கூட அஞ்சத்தேவையில்லை; ஆனால் பயப்பிராந்தி நம்மை மிக மோசமாகப் பாதிக்கக் கூடியது. எனவே நம் ஆசிரியர்கள் மாணவர்கள் தன்னம்பிக்கையோடும் உறுதியோடும் தங்களைத் தங்களின் சுய கட்டுப்பாட்டாலும் நன்னடத்தையாலும் பாதுகாத்துக் கொள்வீர்களாக! அச்சம் தேவையே இல்லை; மன உறுதியே அவசியம்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### (ஊர்மிளை)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

கம்பராமாயணம் படித்தவர்கள் கேட்டவர்கள் கூட அறிந்திராத, கேட்டிராத ஒரு பாத்திரம் ஊர்மிளை. எனக்கு மனதில் சேக்கிழார் பற்றிய ஒரு பெரிய ஆதங்கம் உண்டு. சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் குறிப்பிட்ட 60 நாயன்மார்கள், 9 தொகையடியார்கள், மற்றும் சுந்தரர் அவருடைய தாய் தந்தையர் (சடையனார் இசைஞானியார்) ஆகியவர்களைச் சுந்தரர் சொல்லிய ஒரே காரணத்திற்காக அவர்களைப் பற்றி மட்டும் பாடினார் சேக்கிழார். சில நாயன்மார்களையும் விட அதிகச் சிறப்பான காரியங்களுக்குக் காரணமானவர்கள் அப்பர் பெருமானின் தமக்கை, திலகவதியார், சிறுத்தொண்ட நாயனாரின் தொண்டிற்கு அடிநாதமாகவும் ஊக்கமாகவும் இருந்த நாயகி திருவெண்காட்டு நங்கை, இயற்பகை நாயனாரின் தொண்டிற்கு உயிராக அமைந்த அவர்தம் இல்லத்தரசி, இளையான்குடி மாற நாயனாரின் அறிவிற் சிறந்த இல்லத்தரசி ஆகியவர்கள் பெரியபுராணத்தில் பாடப்படவில்லை பாராட்டப்படவில்லை என்ற ஆதங்கம் எப்பொழுதும் எனக்கு உண்டு.

அதைப்போல் இலக்குவனைக் கைப்பிடித்த ஊர்மிளை, பரதனை மணந்த மாண்டவி, சத்துருகனனை மணந்த சுருதகீர்த்தி இவர்களின் பெயர்களைக் கூடக்கம்பன் குறிப்பிடவில்லை. விஷ்வாமித்ர முனிவர் சனகருடனும் சனகர் தம்பி குசத்துவனிடம் பேசி மூவருக்கும் மணம் பேசி முடித்தார்கள் என்ற குறிப்பைத் தவிர பெயர் கூடக் குறிப்பிடவில்லை. வால்மீகி பெயரைக் குறிப்பிட்டுத் திருமணம் நடந்ததை விவரித்து இருக்கிறார். அவரும் அதற்கு மேலாக மேலே குறிப்பிட்ட மூன்று மனைவிமார்களையும் விவரிக்கவில்லை.

இராமர் கானகம் சென்ற பொழுது அவருக்கு முன்பு சுமித்திரையின் அறிவுறுத்தலின்படி வில்தாங்கி நின்ற இலக்குவனுடன் உன் பிரிவினும் சுடுமோ பெருங்காடு என்று வாதாடி உடன் சென்றாள் சீதை. இந்தக் காட்சியைக் கம்பராமாயணம் படித்து, கேட்ட அனைவருக்கும் கண்களில் நீர் மல்கும் வகையில் கம்பன் விவரித்து இருக்கிறார்.

ஆனால் இலக்குவன் விடைபெறக் கூடத் தன் மனைவியிடம் சென்றதாக அல்லது ஊர்மிளை தான் எதரில் வந்து தன்னை அழைத்துச் செல்ல விண்ணப்பித்ததாகவும் கம்பராமாயணத்தில் எந்தப் பதிவும் இல்லை.

இப்படியொரு காட்சி அமைந்ததாக வால்மீகியும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. பிறர் எழுதிய இராமாயணத்தில் பேசப்பட்டதாகக் கேள்விப்படவில்லை. ஆனால் யாரோ ஒருவர் எழுதிய இராமாயணத்தில் ஊர்மிளையின் உணர்வுகளை விவரித்ததாகச் சில பக்திப் புத்தகங்களில் படித்து இருக்கிறேன். குறிப்பாக சிருங்கேரி சாரதாபீடம் குருமகா சன்னிதானம் சங்கராசாரியார் மடத்தில் இருந்து வெளியிடப்படுகின்ற அம்மன் தரிசனம் என்ற மாத ஆன்மீக இதழில் ஊர்மிளை பற்றிய கருத்துக்கள் வந்திருக்கின்றன; பல மாதங்களுக்கு முன் படித்திருக்கிறேன்.

14 ஆண்டுகளும் ஸ்ரீ இராமனையும் சீதாபிராட்டியையும் காப்பதற்காக உறங்காது தொண்டு செய்த லெட்சுமணன் உறங்காவில்லி என்று கம்பர் பாராட்டுகிறார். ஆனால் ஊர்மிளை தன்னை அழைத்துப் போகச் சொல்லி விண்ணப்பித்தால். இலக்குவனுடைய மனம் சஞ்சலப்படும், தன்னை அழைத்துக் கொண்டு செல்ல இராமபிரான் ஆணையிட்டால் இலக்குவனுடைய மேன்மையான தொண்டிற்கும் அவன் பக்திக்கும் குறைவு ஏற்படும். ஒருமுகமாக ஒரே குறிக்கோளோடு ஸ்ரீ இராமனையும் சீதாபிராட்டியையும் காப்பதே தன் பிறப்பின் நோக்கம் என்று வாழ்ந்த இலக்குவனுக்குத் துயரம் தரக்கூடாது என்பதற்காகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமல் இருந்தாள் ஊர்மிளை. அத்துடன் அண்ணனையும் அண்ணியையும் பேணிக் காப்பதற்காகத் தன்னுடைய வாழ்க்கையில் 14 ஆண்டுகளைத் தியாகம் செய்து திரும்புகின்ற காலத்தில் இலக்குவனுக்குப் பூரணமாகத் தொண்டு செய்ய எண்ணிக் காத்திருந்தாள்.

இலக்குவன் எவ்வாறு 14 ஆண்டுகள் அல்லும் பகலும் கண்மூடாமல் விழித்திருந்து காவல் காத்தானோ அதைப் போல அவன் திரும்பி வந்தவுடன் தான் தன் தியாகப் புருஷனுக்கு அல்லும் பகலும் கண்

உறங்காமல் சேவை செய்து அவனைச் சுகப்படுத்த வேண்டும் என்பதற்காகவே அவர்கள் காட்டில் இருந்த 14 ஆண்டுகளும் அல்லும் பகலும் தூங்குவதே தனது வாழ்க்கை என்று தூங்கிக் கழித்தாள் ஊர்மிளை. கும்பகர்ணன் தூக்கம் கூட இடைவெளிகள் கொண்டது; ஊர்மிளையோ ஏகாந்தமாகத் தூங்குவதே தன் பணி என்று வாழ்ந்தாள். போர்க்களத்தில் போரிடுவதற்கு ஒரு வீரன் எப்படித் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்வானோ அதைப் போல் தன்னுடைய தியாக நாயகனுக்கு 14 ஆண்டுகளும் தொண்டு செய்வதற்காகவே, தூங்கியே தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள் ஊர்மிளை. இந்தத் தியாக சீலியைப் பற்றிக் கம்பர் மிகச் சிறிய பாத்திரமாகக் கூடக் குறிப்பிடாதது வருத்தம் அளிக்கிறது.

இருந்தாலும் ஒரு காப்பியத்தைப் படைக்கின்ற கவிஞன் முக்கிய கதாபாத்திரங்களுக்கு அதிக மகத்துவம் தருவதும் கதைப் போக்கில் பெரும் பாதிப்புக்களைத் தராத பாத்திரங்களை ஒதுக்கித் தள்ளுவதும் காப்பிய இயல்பு என்று நம்மை நாமே சமாதானம் செய்து கொள்ள வேண்டும்.

*(தொடரும்...)*

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 8. திருக்கூடலூர் என்ற ஆடுதுறைப் பெருமாள் கோவில்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்யதேசங்களுள் எட்டாவது திவ்யதேசம், திருக்கூடலூர். சோழநாட்டுத் திருப்பதிகளுள் இது எட்டாவது திருத்தலமாகும். இத்தலம் தஞ்சையில் உள்ளது. கூடலூர் என்றதும் நினைவுக்கு வருவது மதுரை. ஆனால் அது தென்திருக்கூடலூர் சங்கம க்ஷேத்திரம் என்றழைக்கப்படும்; வடதிருக்கூடலூரான இத்தலம் திருவையாற்றில் இருந்து 12 கி.மீ. தொலைவில் கும்பகோணம் செல்லும் பாதையில் உள்ளது.

இதேபோல் ஆடுதுறை என்ற பெயரும், கும்பகோணத்திலிருந்து சீர்காழி செல்லும் பாதையில் உள்ள ஆடுதுறை என்னும் நகரமன்று.

இந்த ஆடுதுறையானது திருவையாறிலிருந்து கும்பகோணம் செல்லும் பாதையில் உள்ள ஒரு எளிய கிராமம்.

இரண்யாட்சகன் என்னும் அசுரன் ஒருசமயம் பூமாதேவியுடன் சண்டையிட்டுப் பூமியைப் பாதாள உலகிற்குள் எடுத்துச் சென்று மறைத்து வைத்தான். எனவே திருமால் வராஹ அவதாரம் எடுத்துப் பாதாளத்திற்குள் சென்று அவளை மீட்டுவந்தார். திருமால் வராஹ அவதாரமெடுத்துப் பூமிக்குள் புகுந்தது இந்த இடம்தான். திருமால் பூமியை இவ்விடத்தில் பிளந்து உள்புகுந்து ஸ்ரீ முஷ்ணத்தில் பூமாதேவியை மீட்டு வெளியில் வந்தார். திருமால் முதலில் இவ்விடத்தில் பூமியைக் கீறிஉள் புகுந்ததால், திருமங்கையாழ்வார் இத்தலத்தை மட்டும் பாடி ஸ்ரீ முஷ்ணத்தைப் பாடாதுவிட்டார் என்றும் கூறுவர். இத்தலத்தில் வராஹ அவதாரம் எடுத்து உட்சென்றவர் என்பதால் கருவறையில் சுவாமியின் இருபாதங்களுக்கு மத்தியில் இருக்கும் இடமே உலகின் மையப்பகுதி என்கின்றனர். வையகமாகிய பூமியைக் காத்து மீட்டுவந்தவர் என்பதால், இங்குள்ள பெருமாள் வையங்காத்த பெருமாள் எனப்படுகிறார். சமஸ்கிருதத்தில் சொல்வதென்றால், ஜகத்தை இரட்சித்த பெருமாள் என்பதால், ஜகத்ரட்சகன் ஆனார்.

அம்பரிஷன் என்னும் மிகச் சிறந்ததிருமால் பக்தன். மன்னர் பதவியைத் துறந்துமகரிஷி ஆனான். இவரின் தவநிலையைச் சோதிப்பதற்காகத் துருவாச முனிவர் அம்பரிஷியின் குடிலுக்கு வந்து அவரது ஏகாதசி விரதத்தின் பலனைக் கொடுக்குமாறு கேட்டார். ஸ்ரீமத் நாராயணரின் நினைவாக அம்பரிஷி தவத்தில் மூழ்கியிருந்ததால், ஏகாதசி முடிந்து துவாதசி வந்தாலும் துருவாசர்வந்திருப்பதைப் பொருட்படுத்தவில்லை.

கோபமடைந்த துருவாசர் அம்பரிஷி மன்னருக்குச்சாபம் கொடுக்க, அம்பரிஷி மஹாவிஷ்ணுவைத் துதித்தார். விஷ்ணு துர்வாசர்மீது சக்ராயுதத்தை ஏவ, அதை எதிர்த்து நிற்க முடியாததுர்வாசர், சக்ராயுதத்தைத் திரும்பப் பெற்ற விஷ்ணு துர்வாசரை மன்னித்தார். இந்நிகழ்வு நடத்தப்பட்டது இத்திருத்தலத்தில் தான்.

பிறகு திருமாலின் வேண்டுகோளுக்கிணங்க, அம்பரிஷி மன்னர் பொன்னியாற்றின் கரையில் திருமாலுக்கு ஒரு திருக்கோயிலை எழுப்பினார். இத்தலத்தில், பெருமாள் தன் கையில் கிளம்புவதற்குத் தயார்நிலையில் பிரயோகச் சக்கரத்துடன் இருக்கிறார். எனவே இங்கு வந்து வழிபடுபவர்களுக்குப் பெருமாளின் சக்கரமே பாதுகாப்பாக இருந்து அவர்களை வழிநடத்தும் என்பது நம்பிக்கை. எனவே இப்பெருமாள் அம்பரீஷ வரதர் என்றும் அழைக்கப்படுகிறார். இந்த அம்பரிஷி மன்னரால் கட்டப்பட்ட கோவில் இப்போது இல்லை.

ராணிமங்கம்மாவினால் கட்டப்பட்ட கோவில்தான் இப்பொழுதுள்ள கோவிலாகும். ராணிமங்கம்மாளுக்கு இக்கோவிலில் சிலையெடுக்கப்பட்டுள்ளது. இக்கோவிலின் மதில் சுவர் மிகநீண்டு அதிக உயரமானதாக, காண்போரை பிரமிக்கச் செய்யும் வகையில் உள்ளது. கோவிலுக்கு முன்னே உள்ள இராஜகோபுரம் ஐந்துநிலைகள் கொண்டது.

ஒருசமயம் புண்ணிய நதிகள் எல்லாம் தம்மில் பலரும் நீராடிபாவக் கறைமிகுந்து போயிருப்பதைப் போக்கும் பொருட்டு, பிரம்மலோகத்திற்குச் சென்று பிரம்மனிடம் முறையிட்டன. அப்பொழுது காவிரியின் அலங்கோல நிலையைக் கண்டு அனைவரும் எள்ளிநகையாட, பிரம்மனால் ஆற்றுப்படுத்தப்பட்டு, இப்பெருமானிடம் தவமிருந்து, பாபவிமோசனம் பெற்று இழந்த பொலிவைக் காவிரிதிரும்பப் பெற்றாள்.

நந்தக் முனிவரின் மகளான உஷை, தலப்பெருமாளுக்கு மலர்ச் சேவை செய்துவந்தாள். அவள் மேல் மையல் கொண்ட சோழ மன்னன் ஒருவன் அவளை மணந்து கொண்டான். பின் அமைச்சர்களின் பொய்யான தகவல்களை நம்பி, அவளைவிட்டுப் பிரிந்தான். பின் பெருமாளே அவர்கள் கூடி வாழக் காரணமாக இருந்ததாகவும், அதனால் இத்தலம் கூடலூர் என்று பெயர் பெற்றதாகவும் ஒரு பழங்கதை நிலவி வருகின்றது.

மூலவர் : வையம் காத்த பெருமாள், உய்யவந்தார் மற்றும் ஜகத்ரட்சகன்

உற்சவர் : செங்கோல் ஏந்தியகோலம், மூலவருக்குள்ள அதே நாமங்கள்

தாயார் : பத்மாசினித் தாயார் மற்றும் புஷ்பவல்லி

கோலம் : கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்

தீர்த்தம் : சக்ரதீர்த்தம்

விமானம் : சுத்தஸத்வ விமானம்

விருட்சம் : பலாமரம் – பெருமாளின் சக்கரம் துர்வாசரை விரட்டிச் சென்றபோது, இங்கு சங்குதான் பிரதானமாக இருந்ததாம். இதனை உணர்த்தும் விதமாக, பலாமரத்தில் சுயம்புவாக திருச்சங்கின் வடிவம் உருவாகியிருக்கும்.

என் அய்யா காப்பியக் கவிஞர். நா.மீனவனார், திருக்கூடலூர் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. ஒரு சமயம் பொன்னியில் வெள்ளப்பெருக்கு உண்டாகி, அதன் கரையிலிருந்து இக்கோவில் அழிந்து மண்மேடாகிவிட்டது. கோபுரத்தையும், மதில்களையும், விக்ரஹங்களையும் வெள்ளம் அடித்துச் சென்றாலும், மூலவர், உற்சவர், தாயார் மட்டும் பொன்னியின் போக்கில் சென்று ஒரு புறம் ஒதுங்கிநின்றன. மீன் வேட்டைக்குச் சென்ற பரதவர் வலையில் சிக்கி, அவர்களால் எடுத்துச் செல்லப்பட்டு, அவர்கள் சேரியில் அமர்ந்தனர்.

வெள்ளம் வடிந்த சில தினங்களில், மதுரையில் ராணிமங்கம்மாளின் கனவில் மஹா விஷ்ணு தோன்றி, ஆற்றங்கரையில் ஒதுங்கிச் சேரியில் இருக்கும் தமக்குக் கோயில் கட்டுமாறுகேட்டுக் கொண்டார். ராணியும் உடனே தனது தளபதி மற்றும் படைபரிவாரத்துடன் சென்று வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொண்டர். அப்போது, சேரிக்கருகாமையில் ஆடுதுறைக் கிராமத்தில் ஒருபேரொளி தோன்றியது. அவ்வொளி தோன்றிய இடத்தில், ராணிமங்கம்மாள் ஒரு கோவிலை எழுப்பினார். அது தான் தற்பொழுது நாம் காணும் ஆடுதுறைப் பெருமாள் கோவில் ஆகும். சேரியிலிருந்து கொண்டுவரப்பட்ட உற்சவரும் தாயாரும் மட்டுமே இக்கோவிலில் உள்ளனர். மூலவர் அருகிலுள்ளவழுத்தூர் என்னும் இடத்தில் வைக்கப்பட்டுள்ளார். உய்யவந்தப் பெருமாள் கோயில் கொண்டுள்ள இடமான ஆடுதுறையைப் பணியச் சொல்லும் முதலாம் பாடல்.

*பொன்னி பெருக்கெடுக்க அதன் போக்கில் உய்யவந்தார்*
*என்னும் பெருமான் பரதவர்கள் இட்டவலை*
*தன்னிலேசிக்கி இவண் தான்கோயில் கொண்டஇடம்*
*அன்னவயல் சூழ்ந்திலகும் ஆடுதுறைப் பணிகுதுமே.*

2. நந்தக முனிவரோடு தேவர்கள் ஒன்று கூடி, ஹிரண்யாஷனின் கொடுமையிலிருந்து பூவுலகைக் காப்பதற்காக உன்னருளைக் காட்டு என்று பெருமாளின் கால்மலரைத் தொழுத காரணத்தால் இந்த புண்ணியத்தலம் கூடலூர் ஆயிற்று. பாட்டரசனாகிய திருமங்கையாழ்வாரால் 10 பாசுரங்களில் மங்களாசாசனம் செய்யப்பட்ட இக்கூடலூர்த் திருத்தலத்தைப் பணியச் சொல்லும் இரண்டாம் பாடல் :

*கூட்டமாய் இங்குவந்து கும்பிட்ட முனிவர்குழாம்*
*காட்டுநீ அருளென்றுகால்மலரைத் தாம்பணிய*
*கூட்டமாய்க் கூடியதால் கூடலூர் என்றமைந்த*
*பாட்டரசன் திருமங்கை பாடுதலம் பணிந்திடுமே*

3. ஆஞ்சநேயர் ஒருசமயம் விண்வெளியில் சென்று கொண்டிருக்கும் போது இக்கோவிலில் இருந்த மக்கள் கூட்டத்தைக் கண்டுவியந்து, இது என்னவென்று பார்க்க வந்தவர், தனது தெய்வம் ஸ்ரீ ராமருக்கே மக்கள் இங்குவழிபாடு எடுக்கிறார்கள் என்று தாமும் அவர்களோடு கலந்து ஆனந்தக் கூத்தாடி மூர்ச்சித்துக் கிடக்க, ஒளிமயமாகப் பெருமாள் ஆஞ்சநேயருக்குக் காட்சி கொடுக்கின்றார். இதன் நினைவாக இக்கோவிலின் முன் கூத்தாடும் பாவனையில் ஆஞ்சநேயருக்கு இன்றும் ஒருசிறிய கோவில் உள்ளது. ஆஞ்சநேயர் வணங்கிய ஆடுதுறைப் பெருமாளைநாமும் வணங்குவோம் எனக் கூறும் மூன்றாம் பாடல் :

*விண்வெளியில் மாருதிசெல் வேளையிலே தரைநோக்கப்*
*பண்விழைந்துதான் பாடிப் பரவசத்தில் மக்களெலாம்*
*மண்மகிழக் கும்பிட்டமகத்துவத்தைத் தான்கண்டே*
*அண்ணலடிவணங்கியதோர் ஆடுதுறைவணங்குதுமே.*

4. இந்தக் கூடலூர்ச் சோலையில் ஒருதென்னைமரத்தில் வாழ்ந்து வந்த கிளியொன்று தினமும் ஒருநாவல் பழத்தைக் கொண்டு வந்து பொருமானுக்குச் சமர்ப்பித்துவிட்டு ஹரி, ஹரி என்று கூவும் பழக்கம் கொண்டிருந்தது. ஒருநாள் அவ்விதமே நாவல் பழத்துடன் ஹரியின் பூஜைக்கு வந்து கொண்டிருக்கும் போது, வேடன் ஒருவனால் எய்யப்பட்ட அம்பால் கழுத்தறுபட்டுத் தரையில் வீழ்ந்துதுடிக்க, அதை எடுக்க வந்தவேடன் அக்கிளியைச் சுற்றி ஒரு ஒளி வட்டம்இருப்பதைக் கண்டுபயந்து ஓடிப்போக, தன் உயிர்பிரியும் தருவாயில் கூட அக்கிளி ஹரி, ஹரி என்றே முனக, இறுதியில் அக்கிளிக்குத் திருமால் காட்சி கொடுத்து, நீ முன்பிறவியில் வித்யாகர்வத்துடன் அனைவரையும் இகழ்ந்து பேசவே இப்பிறவியில் எனது பெயரை மட்டும் சொல்லிக் கொண்டேதிரியும் கிளியாக ஆனாய். வேடனின் அம்புபட்டதும் நினது பூர்வ ஜென்மபாவம் தொலைந்தது என்றதும் ஜோதிமயமானமானிட உருப்பெற்று இறைவனுடன் அக்கிளி ஒன்றறக் கலந்தது. அக்கிளிக்குக் காட்சியளித்தவன், உம்பரினம் எனப்படும் தேவரினத்தின் துன்பத்தை நீக்கி உதவுவதற்காகவே பத்மாசனித் தாயாருடன் இம்பரிலே, அதாவது இவ்வுலகிலே கூடலூரில் இருக்கின்றவனைப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல் :

***அம்புபட்டே இறந்துகிளி அதனுயிரை விடுங்காலை***
***தம்பெயரை ஓதியதால் தன்னுருவைக் காட்டியவன்***
***உம்பரினம் உய்திபெற உதவுபத் மாசனியுடனே***
***இம்பரிலே கூடலூர் இருக்கின்றான் ஏத்துகவே.***

5. மாமாயக் கண்ணனை, கார்வண்ணனை, விண்ணில் இருப்போர்க்கும் மண்ணில் இருப்போர்க்கும் வீடு பேற்றை அருளும் துவாரகையானை, கூடலூரில் நமக்காக இருந்து அருள்கின்ற ஆடுதுறை அமர்ந்தானைப் போற்றச் சொல்லும் ஐந்தாம் பாடல் :

***கண்ணனாம் மாமாயன் கடல்கிடக்கும் கார்வண்ணன்***
***விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் வீடருளும் துவாரகையான்***
***நண்ணுபுகழ்க் கூடுதுறைநமக்கென்றே இருந்தருளும்***
***அண்ணலாம் ஆடுதுறை அமர்ந்தானைப் போற்றுதுமே***

என் அண்ணல், கோகுலத்து பாலகனாய், வாயிலிருந்து ஒழுக ஒழுகத் தயிரை உண்டு, என் உள்ளம் புகுந்தகள்வன்! நாரைகள் வயல்களில் நின்றபடிகாத்திருந்து, சூழ்ச்சியாக மீன்களை நீரிலிந்து கவ்வியெடுக்கும் திருக்கூடலூரில் ஒப்பிலா அப்பிரானே எழுந்தருளியிருக்கிறான் எனக் கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

***பிள்ளைஉருவாய்த் தயிருண்டு அடியேன்***
***உள்ளம் புகுந்தஒருவரூர் போல்***
***கள்ளநாரைவயலுள் கயல்மீன்***
***கொள்ளைகொள்ளும் கூடலூரே.***

*(தொடரும்...)*

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 8

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

ஆழ்வார்களின் மங்களாசாசனத் திருப்பதிகளில் நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டாகும். ஒன்று அயிந்தை என்னும் திருவகீந்திரபுரம், மற்றொன்று திருக்கோவலூர்.

சோழ நாட்டின் 40 திவ்ய தேசங்களையும் தரிசிக்கச் செய்ய நம்மைக் கூட்டிச்சென்ற காப்பியக் கவிஞர் மீனவர் சோழநாட்டின் வடஎல்லையான சிதம்பரத்தின் சித்ரகூடத்திலிருந்து நடுநாட்டிற்குக் கூட்டிச் செல்கிறார். சைவ நாயன்மார்களில் மூத்தவராகிய அப்பரடிகள் கரையேறிய திருத்தலமான திருப்பாதிரிப் புலியூருக்கு மேற்கே உள்ளது திருவகீந்திரபுரமாகும்.

கிழக்கு நோக்கிய திருமுகக் காட்சியுடன் நின்ற திருக்கோலமாய்த் தெய்வநாயகன் என்னும் திருநாமத்துடன் மூலவர் சந்நிதியைச் சேவிக்கும் நாம் தேவநாதன் என்னும் உற்சவரையும் தரிசிக்கின்றோம், தாயார் வைகுந்தவல்லி.

இத்தெய்வ நாயகன் மும்மூர்த்திகளுள் ஒருவனாகும். தோற்றத்தில் - வலக்கையில் பிரம்மாவின் இருப்பிடமான தாமரையையும் நெற்றியில் சிவனின் நெற்றிக் கண்ணையும் பிறகரங்களில் திருமாலின் சங்கு சக்கரதாரியாகவும் காட்சி தருகிறார்.

இத்திவ்ய தேசத்தில் பகைவர்களான ஆதி சேடனாம் பாம்பும் பெருமானைச் சுமக்கும் கருடனும் ஒற்றுமையுடன் சந்நிதி பெற்றுள்ள சிறப்பு எங்கும் இல்லாப் புதுமையுடையதாகும்.

மேலும் இத்திவ்ய தேசத்து எம்பெருமான் மனித உடலின் நோய்தீர்க்கும் மருந்து மலையில் ஹயக்கிரீயராகவும் உள்ளார் என்பதால், இத்தலத்தின் தெய்வநாயகர் சந்நிதியின் கிழக்கே உள்ள சிறிய மலைக்குன்றில் வைத்தியராகக் கோயில் கொண்டுள்ளார்.

இந்த அயக்கிரீவர் கல்விக்கு உரியவராகிய கலை மகளுக்குக் கல்வியைக் கற்றுத் தருபவராகவும் உள்ளார் என்ற ஐதீகத் தத்துவார்த்தத்தால் உடல் தூய்மையும் மனத் தூய்மையையும் ஒருங்கே அருளவல்ல ஆதிமூலமாகச் சேவை சாதிப்பதால் இத்திவ்ய தேசம் வைணவ உலகில் தனித்த சிறப்புக்குரியதாக உள்ளது.

இந்தக் குறிப்புகளை எல்லாம் காப்பியக் கவிஞர் நமக்கு விளக்கும் வகையிலேயே,

முழுமுதலை ஆதியினை மூவரிலே ஒருவனெனத்
தொழுமுதலை ... மலரடியை வணங்குமினே (1)

எனக் கட்டளையிடுகிறார்.

மேலும் இங்குள்ள பெருமான் "பிநாதத்தான் மைத்துனன்" என்று கூறுகிறார். திருப்பாதிரிப் புலியூரில் ஓடும் தென்பெண்ணை ஆற்றுக்குப் பிநாகினிதீர்த்தம் என்று பெயர், அந்தக் கரையோரம் பாடலீசர் குடிகொண்டுள்ளார் என்பதால் மாசி மகத்தன்று கடலூரின் கடலாட்டு விழாவில் சைவ வைணவக் கடவுளர் காட்சியை மக்கள் பெரிதும் போற்றுவர் என்பது இன்றும் நடைமுறையில் உள்ளதால் மீனவரின் வாக்கு மேதா விலாச மேலாண்மை வாக்கன்றோ !

இந்தத் தலப் பரந்தாமன் பாமாலையின் நான்காம் பாடலில் "ஒரு குலத்தில் ஊழ்வினையால் உண்டான பகை தீர்க்கத்தூதான கோவிந்தன்" எனப்பாரதக் கதை நடந்ததற்கு ஊழ்வினையே காரணம் என்ற புதுக்கருத்தைப் புகுத்திப் பாடியுள்ளதும் சிறப்பாகச் சிந்திக்க வைக்கின்றது.

இத்தகு திருவயிந்தையாம் திருவயிந்தி புரத்தைத் திருமங்கை ஆழ்வார், "மூவராகிய ஒருவனை மூவுலகு உண்டு உமிழ்ந்து அளந்தானை, திருவயிந்திரபுரத்துச் சோதியைப் பாடிடப் பாவங்கள் பயிலாவே" என மங்களா சாசனம் செய்ததை நினைப்பித்த மீனவர், நடுநாட்டின் அடுத்த திவ்ய தேசமாம் திருக்கோவலூர்க்கு நம்மை அழைத்துச் செல்கிறார்.

தேயமெலாம் நின்றிறைஞ்சும் திவ்யதலமே திருக்கோவலூராகும். ஆன்மாவின் திருக்கு (மாறுபாடு) ஓவுதல் (நீங்குதல்) ஆன ஊர் என்ற பொருளில் திருக்கோவலூர் எனும் பெயர் பெற்ற தலமாகும். மேலும் ஆன்மாவின் சங்கடத்தை (திருக்கு) மாற்றி ஓவியமாக ஆன்மாவைத் திருத்தி அழகுபடுத்திய தலம் என்பதாகவும் பொருள் காணும் வகையில் திருக்கு ஓவம் (ஓவியம்) செய்வல்ல ஊர் என்பதாகவும் இருவேறு பொருள் உணர்த்தும் திவ்ய தலமே திருக்கோவலூராகும்.

ஓங்கி உலகளந்த உத்தமன உறையும் ஊர் என்ற பெருமையைத் திரிவிக்கிரமன் என்ற திருநாமத்தோடே சேவைசாதிக்கும் பரந்தாமனை மீனவர் பூங்கோதை நாச்சியார் உடனாகச் சேவிக்கச் செய்கிறார்.

புராணத்தின்படி மூவடி மண்கேட்டு வந்த பரந்தாமன், மாவலிச் சக்கரவர்த்தியின் திருக்கை அதாவது மாறுபாடான அகந்தையை அடக்கிய இடமே இந்தத் திருக்கோவலூராம்.

மேலும் ஆழ்வார் பெருமக்களில் மூவர்க்காகப் பரந்தாமன் நிகழ்த்திய திருவிளையாடலானது தத்துவார்த்த உலகியலான பெருமைக்குரியதாகும்.

ஜீவாத்மாக்களாகிய கோக்களை (பசுக்கூட்டங்களை)ப் பக்குவப்படுத்திக் காப்பவன் என்பதால் பரமாத்மாவாகிய பரந்தாமன் இத்தலத்தில் கோவலன் (ஆயன்) என்ற கருத்தில் அவன் தங்கியிருக்கும் ஊர் கோவிலூர் எனப்பட்டதாக மீனவர் சிலாகித்ததும் "முதலாழ்வார் மூவருக்கும் முற்காட்சி அருளியவன்" (1) எனப் பாடிய தமது பாமாலைப் பாடல் வரிக்கான கருத்தையும் பரவசமாகக் கூறினார்.

பன்னிரு ஆழ்வார்களில் பொய்கையார், பேயார், பூதத்தார் என்ற மூவரும் முதலாழ்வார்கள் என்ற சிறப்பைப் பெற்றவராவர். முன்பின் அறிமுகம் இல்லாத இம்மூவரும் ஒரு சிறிய இடத்தில் தங்கும் நெருக்கடி ஏற்பட்டது. இதனால் ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுத்து நின்றும் இருந்தும் கிடந்துமாக மனித நேயத்துடன் இருந்த நிலையில் பரந்தாமனைப் பரவிப்பாசுரம் பாடப்பாடக் கேட்டு ஆனந்தித்த பரந்தாமன் தன் இருப்பிடத்தை விட்டுக் கிளம்பி அம்மூவர் இருக்கும் இடம் நோக்கித் தேடி வந்து தானும் ஒருவராகச் சேர்ந்திருக்க ஆசைப்பட்ட உரசலால் (ஸ்பரிசத்தால்) சோதி சொரூபக் காட்சியால் சேவை விதித்ததும் எங்கும் தெய்வீகம் பரவியது. இந்த வைபமே உலகப் பிரசித்தமாகும், அதாவது மனிதனுக்கு மனிதன், விட்டுக் கொடுத்து வாழும் வாழ்க்கைப் பின்னணியில்தான் (அர்ப்பணிப்பில்தான்) கடவுள் வியாபித்திருக்கிறார் என்ற தத்துவம் உணர்த்திய இடமே திருக்கோவலூராம் என்க ! என்றெல்லாம் மீனவர் தமிழ்ப் பரவசத்தோடு சொல்லச் சொல்லப் பக்தர்கள் யாவரும் திரிகரண சுத்தி பெற்றவராயினர்.

திருமங்கை மன்னர் மங்களாசாசனத்தில் "சீர் அணங்கு மறையாளர் நிறைந்த செல்வத் திருக்கோவலூர்" எனச் சிறப்பிக்கின்றார். மற்றும் பொய்கையாரும் பூதத்தாரும் மங்களாசாசனம் செய்துள்ளார்கள்.

இத்தலத்தில் பலகாலம் தங்கியிருந்த முதலாழ்வார்கள் மூவரும் (பொய்கை, பூதம், பேய்) தத்தமக்கேற்ப அந்தாதி நூல்கள் மூன்று பாடிச் சேவித்தவாறே தீருநாடலங்கரித்தார்கள் என்ற குறிப்பிடத் தகுந்த சிறப்பிற்குரியதாகத் திருக்கோவலூர் தேயமெலாம் போற்றுதற்குரியதாக இருந்தது.

இங்ஙனம் நடுநாட்டின் இரு தலங்களை வணங்கிய நம்மை மீனவர் நடுநாட்டுடன் தொடர்புடைய தொண்டை நாட்டுத் தலங்களைத் தரிசிக்க இட்டுக் செல்கையில் காஞ்சிபுரம் என்னும் திருக்கச்சி நகரத்திற்குச் சென்ற நாம் மூலவர் வரதராசரைத் தரிசிக்கின்றோம். இந்தத் திருத்தலத்தை அத்திகிரி என்பர். அதனால் அத்திவரதர் என்ற சிறப்புப் பெயருடன் பரந்தாமன் சேவை சாதிக்கின்றான்.

இந்த வரதராசர் வரம் தரும் அபயகரத்துடன் மேற்கு நோக்கிய சந்நிதியாக உள்ளார். பெருந்தேவியுடன் சேவை சாதிக்கும் வரதர், தம் அம்சமாகவே அத்தலத்துப் புஷ்கரணியின் உள்ளே நாற்பதாண்டு நீருள் சயனித்தவாறாக ஜலக்குளியலாய் இருப்பார், நாற்பதாண்டு ஒருமுறை தான் உள்ளேயிருந்து வெளியில் எழுந்தருளச் செய்து பத்து நாள் மட்டுமே வழிபாட்டுக்குரியவராய்த் தரிசனம் தருவார். இந்த வரதராச அம்சத் திருவுருவமானது அத்தி மரத்தால் ஆனதால் அத்திவரதர் எனப் பட்டார். நீரில் கிடந்தாலும் மரம் உப்புதல் போன்ற தோற்றச் சிதைவு ஏதும் இருக்காது. இத்திருவுரு, கிடந்த கோலமாய்ச் சேவை தருவதால் காஞ்சிபுரத்தின் வைணவச் சிறப்பு தனிப்பட்டதாக உணரப்படும்.

தொண்டை நாட்டின் தலைநகராகத் திகழும் காஞ்சிபுரத்தைச் சின்னக் காஞ்சிபுரம் பெரிய காஞ்சிபுரம் என இரண்டாகப் பிரித்தறியும் நிலையில் 14 திவ்ய தேசங்கள் இவ்விரு நகரங்களில் உள்ளன.

அத்திவரதர் உள்ள இடம் சின்னக் காஞ்சிபுரமாகும். திருக்கச்சி என்ற பெயர் பொதுவாகக் காஞ்சிக் குரியதானாலும் திருத்தமாகத் தக்கபடி அமைக்கப்பட்ட கச்சிதமான நகர் என்ற கருத்தைத் தொனிக்கும் வகையில் திட்டமிட்டு அமைந்த நகராதலால் திருக்கச்சி எனப் புகழப்பட்டது. இதன் நேர்த்தியைச் சிலாகிக்கும் விதமாகவே மீனவர் "அழகுபொலி திருக்கச்சி அத்திகிரி வாழ் இறைவன்"என முதல் பாடலில் பாடிச் சிறப்பித்தார்.

மேலும் இங்குள்ள வரதன் பேருளாளன் என்ற புகழ்ப்பெயர் உடையவனாக உள்ளான். அதனைச் சிறப்பிக்கவே மீனவர் எழில் பொலியும் பேருளாளன் இயல்வரதன் என்று பாடினார். இதனால் மனிதர்களின் சாபக் கேடுகளும் பாவங்களும் போக்கிடச் செய்து வரம் வழங்குபவனாக வரதன் உள்ளான் எனச் சேவை சாதிக்கும் வரதனை வணங்கச் செய்கிறார்.

இந்தத் திருக்கச்சியாம் சின்னக் காஞ்சிபுரத்தைத் திருமங்கை மன்னரும் பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் மங்களா சாசனம் செய்துள்ளனர்.

கல்லார் மதிள்சூழ் கச்சி நகருள் நச்சிப் பாடகத்துள்
எல்லா வுலகும் வணங்க இருந்த அம்மான்

எனத் திருமங்கையாரும், நீள்கச்சியுள் வெஃகாவும் எனப் பேயாரும் ஆழியான் அத்தியூரான் எனப் பூதத்தாழ்வாரும் பாடிச் சிறப்பித்துள்ளனர்.

இந்த அத்தியூர் பொதுவாகக் கச்சி எனக் குறிப்பிடும் இடங்களில் இத்தலமாகக் கருதப்படும். மேலும் வைணவர்கள் கோயில் எனத் திருவரங்கத்தை முதலாகக் கொண்டாலும் அடுத்து வேங்கடத்தையும் அத்தியூரையுமே கருதுவர்.

ஐராவதம் என்ற யானையே மலையுருவில் பெருமாளைத் தாங்கியதால் அத்திகிரியானது. மேலும் இந்த அத்திகிரியை முன்னிலைப்படுத்திப் பிரம்மா அசுவமேத யாகம் செய்ய, அப்போது கிளைத்த புண்ணிய கோடி விமானத்தில் ஏறியருளி ஆன்மாக்களுக்கு வரம் அருளியதால் வரதன் ஆனார் அத்திவரதர் எனத்தலக் குறிப்புகளைத் தந்தவண்ணமாய் மீனவர் நம்மை அடுத்ததொரு காஞ்சிபுரத் திருவட்டபுயகரம் என்னும் திவ்ய தேசத்திற்கு அழைக்கச் சென்றதும் அங்கு பத்மாசனியாம் அலர்மேலுமங்கை உடனுறை கசேந்திர வரதரைச் சேவிக்கின்றோம்.

இங்குள்ள பரந்தாமன் எட்டுத் திருக்கரங்களுடன் மேற்கு நோக்கிய நின்ற திருக்கோலத்துடன் சேவை சாதிக்கின்றார். எட்டு புஜம் என்ற வகையில் அட்டபுயகரம் எனப் பெருமாளின் வடிவம் கருதி ஊருக்குப் பெயர் அமைந்தது.

மேலும் இந்த எட்டுகரம் எவ்வாறெனில் இங்குள்ள பெருமான் சிவனும் விஷ்ணுவும் கலந்த ஏக உருவமாக உள்ளதால் அட்டபுஜம் எனப்பட்டது. பகுத்தறிவற்ற யானை (கஜேந்திரன்) முதலைவாய், அகப்பட்டபோது ஆதி மூலமே என அழைக்க ஓடிவந்து காத்தலால் பரந்தாமன் கஜேந்திர வரதன் எனப்பட்டான். இதனை ஆதிமூலப் பரமாத்மத் தத்துவம் என்பர்.

அட்டபுயகரத்தான் எனப் பரந்தாமனை அடையாளம் காட்டும் மீனவர், திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் மங்களாசாசனம்

செய்த குறிப்பையும் சேர்த்துக் கூறுகிறார். சிவனும் பிரம்மாவும் இந்த அட்டபுயங்கப் பரந்தாமனைக் கண்டு "அறிவுருவாம் இவர் ஆர் கொல்? என்ன அட்டபுயகரம்" எனத் திருமங்கையாரும், "தொட்ட படைஎட்டும் தோலாத வென்றியான், அட்டபுயகரத்தான்" எனப் பேயாழ்வாரும் பாடியுள்ளனர். இத்தகு அட்டபுயங்கனைக் கண்டு பணிகின்ற பணி கடனென்று கொண்டாரைத் துயரங்கள் சேரா என அட்டபுயங்கரைச் சேவிக்கச் செய்த மீனவர் சின்னக் காஞ்சிபுரத்தில் உள்ள திருத்தண்கா என்ற திருத்தலத்திற்கு மீனவருடன் நாம் சென்று சேவிக்கின்றோம்.

தூப்புல் என்ற ஒரு திருநாமமும் இத்திருத்தலத்திற்கு உண்டு. வேதாந்த தேசிகரைத் தூப்புல் பிள்ளை என்று வைணவர்கள் சிறப்பித்து அழைப்பர். திருவகீந்தரத்தில் இவருக்கெனத் தனிச்சந்நிதி உண்டு. பல சுலோகங்களைப் படைத்திட்ட தேசிகனார் எனச் சிறப்பாக அழைக்கப்பெறும் இவரைத் "தூப்புல் இருக்கும் இடம் துயர்களையும் திருத்தண்கா" என மீனவர் கூறுகிறார். இதனால் தேசிகரின் அவதாரத் தலமே திருத்தண்கா எனத்தெரிகிறது. மங்களாசாசனமாகத் திருமங்கையார் பாடும்போது "திருத்தண்காவில் விளக்கொளியை" என்று பாடுவதால் இங்குள்ள பரந்தாமன் தீபப் பிரகாசன் என்றும் விளக்கொளி பெருமான் என்றும் பெயர் பெற்றுள்ளதாய் மீனவர் கூறத் தாண்காவைச் சேவித்தவாறு திருவேளுக்கை செல்கின்றோம்.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

**(ம. கார்மேகம்)**

### ஊக்கம் உடைமை

(செயலில் கிளர்ச்சி உடைமை)

**1. உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதுஇல்லார்**
**உடையது உடையரோ மற்று.**

உடையர் எனப்படுவது ஊக்கம் - ஒருவர் ஒன்று உடையவர் என்று சொல்லப் பெறுவது ஊக்கம் ஆகும்; அஃது இல்லார் - அந்த ஊக்கம் இல்லாதவர்; மற்று உடையது - வேறு எது உடையவராயினும் உடையரோ - உடையவராகா மாட்டார்.

ஊக்கம் உடையவரே எல்லாம் உடையவர் எனப்படுவார்; ஊக்கம் இல்லையேல் வேறு எது உடையவராயினும் உடையவர் ஆக மாட்டார்.

**2. உள்ளம் உடைமை உடைமை பொருள்உடைமை**
**நில்லாது நீங்கி விடும்.**

உள்ளம் உடைமை உடைமை - உள்ளத்தில் ஊக்கம் உடைமையே உடைமை எனப்படும்; பொருள் உடைமை - வெறும் பொருள் மட்டும் உடையனாயின்; நில்லாது நீங்கிவிடும் - அப்பொருள் நிலைக்காது நீங்கி விடும்.

உள்ளத்தில் ஊக்கம் உடைமையே உடைமை எனப்படும். வெறும் பொருள் உடைமை நிலைக்காது நீங்கி விடும்.

உள்ளம் - இடவாகு பெயர்.

**3. ஆக்கம் இழந்தேம்என்று அல்லாவார் ஊக்கம்**
**ஒருவந்தம் கைத்துடை யார்.**

ஆக்கம் இழந்தேம் என்று - பொருளை இழந்துவிட்டோம் என்று; அல்லாவார் - துன்பப்பட மாட்டார்கள்; ஊக்கம் - ஊக்கத்தை; ஒருவந்தம் - ஒருதலையாக; கைத்துடையார் - கையகத்தே உடையவர்கள்.

ஊக்கத்தை ஒருதலையாகத் தம் கையகத்தே உடையவர்கள் பொருளை இழந்து விட்டோம் என்று துன்பப்பட மாட்டார்கள்.

**4. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவுஇலா**
**ஊக்கம் உடையான் உழை.**

ஆக்கம் - செல்வமாகிய பொருள்; அதர்வினாய்ச் செல்லும் - வழிகேட்டுச் செல்லும்; அசைவு இலா - சோர்வு இல்லாத; ஊக்கம் உடையான் உழை - ஊக்கத்தை உடையவனிடத்தே.

சோர்வு இல்லாத ஊக்கத்தை உடையவனிடத்தே செல்வமாகிய பொருள் தானே வழிகேட்டுச் செல்லும்.

**5. வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத்து அனையது உயர்வு.**

வெள்ளத்து அனைய மலர்நீட்டம் - நீரின் அளவைப் பொறுத்தே மலரின் தாள் நீட்டம் உண்டு; மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு - மனிதர்தம் ஊக்கத்தின் அளவே அவர்களின் உயர்வும் ஆகும்.

குளத்து நீரின் அளவைப் பொறுத்தே மலரின் தாள் நீட்டம் உண்டு; அதுபோல் மனிதர்தம் ஊக்கத்தின் அளவே அவர்களின் உயர்வும் ஆகும்.

**6. உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் மற்றுஅது**
**தள்ளினும் தள்ளாமை நீர்த்து.**

உள்ளுவது எல்லாம் - நினைப்பது எல்லாம்; உயர்வு உள்ளல்- தம்

உயர்வையே நினைக்க வேண்டும்; மற்று அது - அந்த உயர்வு; தள்ளினும் - விதி தள்ளினாலும்; தள்ளாமை நீர்த்து - தள்ளாத தன்மை உடையதாகும்.

நினைப்பது எல்லாம் தம் உயர்வையே நினைத்தால் விதி தள்ளினாலும் அந்த உயவு தள்ளாத தன்மை உடையதாகும்.

மற்று - அசைச் சொல்.

**7. சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதைஅம்பின்**
**பட்டுப்பாடு ஊன்றும் களிறு.**

சிதைவிடத்து - உயர்வுக்குச் சிதைவு வந்தபோது; ஒல்கார் - தளர மாட்டார்; உரவோர் - ஊக்கம் உடையவர்; புதை அம்பின் - அம்புக் கட்டினால்; பட்டுப்பாடு ஊன்றும் களிறு - பட்டபோது புண்பட்ட யானை தளராது நிலைத்து நிற்கும்.

அம்புக் கட்டினால் தாக்கப்பட்டுப் புண்பட்ட போதும் யானை தளராமல் நிலைத்து நிமிர்ந்து நிற்கும். அது போல ஊக்கம் உடையோர் தம் உயர்வுக்குச் சிதைவு வந்தபோது தளர மாட்டார்.

**8. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து**
**வள்ளியம் என்னும் செருக்கு.**

உள்ளம் இலாதவர் - விளக்கம் இல்லாதவர்கள்; எய்தார் - பெறமாட்டார்கள்; உலகத்து - உலகத்தாரில்; வள்ளியம் என்னும் - வள்ளல் தன்மை உடையோம் என்னும்; செருக்கு - மதிப்பு.

ஊக்கம் இல்லாதவர்கள் உலகத்தாரில் தாம் வள்ளல் தன்மை உடையோம் என்னும் மதிப்பைப் பெறமாட்டார்கள்.

**9. பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை**
**வெரூஉம் புலிதாக் குறின்.**

பரியது - பெரியது; கூர்ங்கோட்டது ஆயினும் - கூர்மையான தந்தங்களை உடையது என்றாலும்; யானை வெரூஉம் - யானை அஞ்சும்; புலிதாக்குறின் - புலி தாக்கினால்.

யானை பெரியதானாலும் கூர்மையான தந்தங்களை உடையது என்றாலும் தன்னைப் புலி தாக்கினால் அஞ்சும்.

வெரூஉம் - இன்னிசை அளபெடை.

**10. உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃது இல்லார்**
**மரம்மக்கள் ஆதலே வேறு.**

உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை - ஒருவனுக்கு வலிமை என்பது ஊக்கமாகிய செல்வம்; அஃது இல்லார் - அந்த ஊக்கம் இல்லாதவர்;

மரம் - மரங்களாவர்; மக்கள் ஆதலே வேறு - மக்கள் ஆதல் வேறு நிலையால்.

வலிமை என்பது ஒருவனுக்கு ஊக்கமாகிய செல்வம்; அந்த ஊக்கம் இல்லாதவர் மரங்களாவார்; வடிவத்தால் மட்டுமே மக்களாவார்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### தருமிக்குப் பொற்கிழி அருளியது

வேந்தர் வேந்தனாகிய பாண்டியன் வங்கிய சூடாமணி சோமசுந்தரப் பெருமானுக்குச் சூட்டப் பல்வகை மலர்கள் தரும் திருநந்தவனம் அமைக்கும் திருப்பணியை மேற்கொண்டான். காலை நடுப்பகல் மாலை என மூன்று காலங்களிலும் பயன்படுமாறு மலர்களைத் தந்துதவியது நந்தவனம். பாண்டியன் மேற்கொண்டு தனியாக ஒரு சண்பக நந்தவனத்தையும் அமைத்தான்.

தான் அமைத்த சண்பக நந்தவனம் அழகு பெற்று நறுமணத்துடன் வளமுற்று வருவதைக் கண்டான் வங்கிய சூடாமணி பாண்டியன். இறைவன் திருவருளை எண்ணி எண்ணி மகிழ்ந்தான். சணபக நன்மலர்களைக் கொய்து ஆய்ந்து இண்டை, தொடை, தொங்கல், தாமம், கண்ணி எனப் பலவகை மாலைகளைத் தொடுத்துச் சோமசுந்தரப் பெருமானின் திவ்ய மேனியிலே சாற்றி அணி செய்தான். பொன்னைப் போன்ற சண்பகமலர் மாலையணிந்த சோமசுந்தரப் பெருமானின் நற்கோலத்தைக் கண்டு ஆச்சரியமுற்று சண்பகசுந்தரர் இவர்! என்று மொழிந்து வணங்கினான். அன்று தொட்டு திரு ஆலவாய்ச் சுந்தரப் பெருமானுக்குச் சண்பக சுந்தரர் என்ற திருப் பெயரும் வழங்குவதாயிற்று. சண்பக மாலைகளைப் பெருமானுக்குச் சாற்றிய காரணத்தாலே வங்கிய சூடாமணி பாண்டியனும் சண்பக பாண்டியன் என்ற பெயர் பெற்று விளங்கினான்.

இளவேனிற்காலம் வந்தது. வேனற்கால வெப்பம் தாங்கமுடியாததாக இருந்தது. மாமரங்கள் செந்தளிர் காட்டிச் சிவந்து நின்றன. செருந்தி, முள்முருக்கு, கடம்பு முதலான மரங்களெல்லாம் பூத்துக் குலுங்கின. குங்கும மலர்கள் மகரந்தம் சிந்தின. அக்காலத்திலே வாடி இலை யுதிர்த்த மரங்களும் பல உண்டு. தென்றல் காற்று அங்கங்கே கலைகள் தேரும் அறிவனைப்போலத் தவழ்ந்து வந்தது. இத்தகைய இளவேனிற் காலத்திலே சண்பகமாறன் தனது தேவியோடும் சென்று சண்பக வனத்திலே

தங்கியிருந்தான். வெப்பம் தணிதலின் பொருட்டாகத் தனது தேவியும் தானுமாகத் தனியாயிருந்த போது அவனுக்கு நேராகப் புதுமணம் தோன்றும்படித் தென்றல் வீசியது. சண்பகமாறன் அந்தப் புது நறுமணத்தை மோந்து மகிழ்ந்தான். இது திவ்ய மானதொரு நவகந்தம்; சோலையிலுள்ள மணம் அல்ல; காற்றுக்கு இயற்கையாக எந்த மணமும் கிடையாது; இந்த வாசனை எதிலிருந்து எவ்வாறு வீசுகிறதோ! என்று வியந்தான். வியந்து கொண்டே தனது தேவியைத் திரும்பிப் பார்த்தான். அவளுடைய கூந்தலிலிருந்தே அப்புதுமணம் வீசுகிறது என்பதைத் தேர்ந்தான். ஆகா! பூ வண்டுகளுக்கும் தெரியாத மணம் அல்லவா இது! என்று கருதி வியப்படைந்து இத்தகைய வாசனை கூந்தலுக்கு இருப்பது இயற்கையாலா அல்லது செயற்கையாலா? என்று சந்தேகம் கொண்டான்.

பாண்டியன் அரண்மனை வந்து சேர்ந்தான். நான் சந்தேகப்பட்ட கருத்தை யாராவது அறிந்து செய்யுள் செய்வார்களானால் அவருக்கே ஆயிரம் பொன் அடங்கிய இந்த முடிப்பு உரியதாகும், என்று சொல்லிப் பொற்கிழி யொன்றை ஏவலர் கையிலே கொடுத்தான். அவர்கள் பொற்கிழியைக் கொண்டுபோய் சங்க மண்டபத்தின் முன்னால் தொங்கவிட்டனர். சங்கப் புலவர்களெல்லாம் தத்தமக்குள்ளே பல்வேறு விதமாகப் பாண்டியனது உள்ளத்திலிருந்த ஐயப்பாட்டைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் அதுபற்றி ஒன்று கூடி ஆராய்ந்தார்கள்; தனித்தனியே ஆராய்ந்தார்கள். ஆனால் மாறனது மனத்திருந்த சந்தேகத்தைப் புரிந்துகொள்ள மாட்டாமல் மனம் உளைந்தனர்.

அந்தச் சமயத்திலே ஆதிசைவக் குலத்தில் பிறந்தவனும், மாணவனும், பெற்றோரை இழந்தவனும், பிரம்மசாரியுமாகிய தருமி என்பவன் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்து வணங்கினான். கடவுளே! அடியேன் பெற்றோர் இல்லாதவன்; கதியில்லாதவன்; விவாகம் செய்துகொள்ள விரும்புகிறேன். ஆனால் அவ்வாறு செய்துகொள்ளப் பொருள் இல்லை. எவ்வளவுதான் வேதாகமங்களையெல்லாம் ஓதியவனாக இருந்தாலும் இல்வாழ்க்கை இல்லாது போனால், பெருமானை அருச்சிக்க உரியவன் ஆவேனோ? ஆதலால் தேவரீர்! எல்லாம் உணர்ந்து எல்லாம் வல்ல தாம் பாண்டிய மன்னனது உள்ளாழ்ந்த கருத்தையமைத்து எளியேன் உய்க்கும்படிக்குச் செய்யுள் ஒன்று அருள வேண்டும் என்று குறையிரந்தான்.

உடனே ஆலவாய்ச் சோமசுந்தரக் கடவுள்,

*கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி*
*காமஞ் செப்பாது கண்டது மொழிமோ*
*பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்*
*செறியெயிற் றரிவை கூந்தலி*
*னறியவு முளவோ நீயறியும் பூவே.*

என்ற சொன்னயம் மிகுந்த செந்தமிழ்ச் செய்யுளொன்றைப் பாடித் தருமியின் கையிலே ஈந்தருளினார். புதையல் கண்டவன் போலப் பெருமகிழ்வெய்திய தருமியும் பாடல் பெற்றுச் சோமசுந்தரப் பெருமானை வணங்கினான்.

பின்னர் அந்தச் செய்யுளை எடுத்துக்கொண்டு கற்றுத் தேர்ந்த புலவர் இருக்கும் சங்க மண்டபத்தை அடைந்து அதனை அவர்கள் கையிலே கொடுத்தான். சங்கப் புலவர்கள் எல்லாரும் தருமி தந்த செய்யுளை விரைவாக வாங்கிப் படித்தனர். செய்யுளுடைய அமைப்பையும், போக்கையும் சொல்லழகையும், பொருளாழத்தையும் சீர் தூக்கிப் பார்த்து வியந்து பாராட்டினர். சண்பக மாறன் முன்னிலை சேர்ந்து அந்தப் பாடலைச் சொல்லிப் பொருள் விளக்கம் செய்தனர். தன்னுடைய மனக் கருத்தோடு அந்தச் செய்யுளின் கருத்தும் ஒத்திருந்ததால் பாண்டியன் மகிழ்ந்து வியந்தான். இப் பாடல் கொணர்ந்த அந்தணன் இப்போதே இப் புலவர்களுடன் சென்று ஆயிரம் செம்பொன்னையும் பெற்றுக் கொள்வானாக என்று பணித்தான்.

மாறன் மகிழ்ந்து கூறியபடியே தருமியும் புலவர்களுடன் சங்க மண்டபம் சென்றான். மண்டபத்தின் முன்னே தொங்கிக் கொண்டிருந்த பொற்பையை அறுக்கத் தொடங்கினான். உடனே, அங்கே விரைந்து வந்த நக்கீரன் அதனைத் தடுத்து நிறுத்தி, இந்தச் செய்யுளிலே குற்றம் உள்ளது என்றான்.

தருமியோ தமிழ்ப் புலமையில்லாதவன். கைக்கெட்டியது வாய்க்கெட்டாதவனைப் போல ஏமாந்து ஏங்கி வாடினான். செய்யுள் தீட்டிய திருவோலையை எடுத்துக்கொண்டு திருக்கோவில் சென்றான். சோமசுந்தரப் பெருமான் திருமுன் அதனை வைத்து, ஆல வாய் அண்ணலே! குற்றமுள்ள பாடலை ஏன் தந்தீர்? வறுமையால் வாடுகின்ற நான் பெறுகின்ற பொன்னை இழந்தேன் என்று கூற வரவில்லை, இறைவா! தேவரீர் பாடியருளிய செய்யுளிலும் மனிதப் புலவர் குற்றம் காண்பது என்று வந்தால் தங்கள் மதிப்பு என்னாவது? இகழ்ச்சியானது எம்பெருமானையல்லவா சார்கிறது என்று கூறிக் கவலையால் வருந்தினான்.

தருமியின் இரங்கு சொல் கேட்ட இறையனார் புலவர் வடிவம் கொண்டு வெளியே வந்தார். புலவர் பெருமான் மகரகண்டிகை, பதக்கம், குண்டலம், மோதிரம் முதலிய ஆபரணங்களை அணிந்து விளங்கினார். விபூதிப் பூச்சு திருமேனியில் துலங்கியது. முத்தமிழ் வல்லோன் தான் என்பதை நன்கு எடுத்துக் காட்டும்படி அமைந்திருந்தது அவரது திருக்கோலம். திருவடிகளிலே பாதுகை திகழ்ந்தது. முத்துக்குடை நிழல்தர, வெண்சாமரை வீச, இளைஞர்கள் அடப்பை, காளாஞ்சி, பூத்தட்டு முதலியன ஏந்தி உடன்வர, கற்றுச் சொல்லிகள் பின்வரச் சங்க மண்டபம் சென்றார்.

சென்றவுடனே சோமசுந்தரப் புலவர் அங்கிருந்த புலவர்களைப் பார்த்து, எமது கவிக்கும் குற்றம் சொன்னவர் யார்? என்று வினாவினார். உடனே நக்கீரன் சிறிதும் பயப்படாமல் முன் வந்து, குற்றம் சொன்னது நானே என்றான். புலவர், என்ன குற்றமோ? என்று கேட்க நக்கீரன், சொற்குற்றமில்லை; பொருட்குற்றம் என்றான். புலவர், அந்தப் பொருட் குற்றம்தான் என்ன? என்று வினாவினார். நக்கீரன் தனக்குக் குற்றம் ஏற்படுவதை உணரவில்லை ஆதலால், பூக்கள் வைத்துக் கொள்வதால்தான் கூந்தலுக்கு மணம் ஏற்படுகிறதே அல்லாமல் கூந்தலுக்கு இயற்கையான மணம் எதுவும் கிடையாது, என்று கூறினான். பத்மினி ஜாதிப் பெண்களுடைய கூந்தலோ? என வினாவினார் புலவர். அதுவும் அத்தன்மையுடையது தான் என்றான் கீரன். தேவமாதரின் கூந்தலோ? என்று கேட்டார் புலவர். மந்தார மலர் சூடுவதால் அதுவும் செயற்கை மணமுடையதுவே, என்றான் கீரன். நீ துதித்து வழிபடும் காளத்தி நாதருடைய சக்தியாகிய ஞானப் பூங்கோதையம்மையாரின் கூந்தலும் அப்படிப்பட்டது தானோ? என்று இறுதியாக வினவினார் தெய்வப் புலவர். அதுவும் அத்தன்மை யானதே என்று உறுதியாகக் கூறினான் கீரன். கீரனது சலஞ்சாதிக்கும் தன்மையைக் கண்ட சிவபெருமானுக்குக் கோபம் வந்தது. உடனே தனது நெற்றிக் கண்ணைச் சிறிது காட்டினார். நக்கீரன் அதற்கும் அஞ்சவில்லை, இந்திரனைப்போல உடம்பு முழுதும் கண்களை நீர் உடையவரானாலும் உமது பாடலிலுள்ள குற்றம் குற்றமே! என்று சாதித்துவிட்டான் கீரன்.

சிவபெருமான் உக்கிர மூர்த்தியானார். அவரது நெற்றிக் கண்ணிலிருந்து செந்தழல் பாய்ந்தது. அதன் வெப்பத்தைப் பொறுக்க முடியாத நக்கீரன் ஓடோடியும் சென்று பொற்றாமரைக் குளத்திலே விழுந்து மூழ்கினான். புலவர் உருவம் கொண்டு வந்தருளிய சோமசுந்தரக் கடவுளும் மறைந்தருளினார்.

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்